# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 4] குன்றக்குடி 31—12—62 வார இதழ் விலை – 10 காசுகள். [இதழ் 6

## இறைவன் எங்கே?

அன்புடையார் நெஞ்சத்தே அமர்ந்தி ருப்பான்
அறிவாளர் சிந்தையிலே வீற்றி ருப்பான்
நன்றுயர்ந்த சான்றோர்தம் மனத்தி ருப்பான்
நனியுருகி நினைந்தழுவார் உள்ளி ருப்பான்
நன்றேத்திப் புகழ்வார்தம் நெஞ்சி ருப்பான்
நான்மறைகள் ஓதிடுவார் உளத்தி ருப்பான்
நன்மலர்கள் தூவியுளங் கசிந்து நிற்பார்
நன்னெஞ்சில் நாளும்நின் றருள்சு ரப்பான்;
மனமாசை விட்டொழித்த அன்பர் தங்கள்
மனத்தினையே சுடுகாடாய்க் கருதி, அன்பர்
இனநலமே பெரிதாக எண்ணி நாளும்
இன்பக்கூத் தாடிடுவஃன் எம்மான் பித்தன்
நினைப்பார்தம் சிந்தையினைக் கோயி லாக்கி
நின்றருள்வான்; வருத்தங்கள் கவலை போக்கி
இனித்தான நல்லின்பம் ஈவான் தன்னின்
இணையடிகள் போற்றிநாம் சிந்தை செய்வோம்!

—சாமி பழனியப்பன்.





## அடிகளாரின் உவமைநயம்

ஒருநாள் காலை நேரம். அடிகளார் அவர்களைத் தரிசித்துப் போவதற்காக அன்பர்கள் சிலர் வந்திருந்தனர். அப்போது அடிகளார் அவர்கள் தமது அணுக்கத் தொண்டர் அண்ணாமலையைக் கூப்பிட்டுத் தமது கைவிரல் ஒன்றை நீட்டினார்கள். அண்ணாமலை சட்டென்று உள்ளேபோய் ஏதோ மருந்தை எடுத்துவந்து விரலில் தடவினார்.

"விரலில் என்ன?" என்று வந்திருந்தவரில் ஒருவர் கேட்டார்.

"ஒருநாள் 'வாலிபால்' விளையாடும்போது அடிபட்டு விட்டது" என்று அடிகளார் அவர்கள் சொன்னார்கள்.

வந்திருந்தவரில் இன்னொருவர், "அது ரொம்ப நாளாயிற்றே, இன்னுமா குணமாகவில்லை?" என்றார். "ஆம்" நான் என்ன, புறம்போக்கு மரந்தானே?" என்றார்கள் அடிகளார் அவர்கள். கூடியிருந்தவர்களில் சிலர் கொல்லென்று சிரித்தார்கள். வேறு சிலர் கண்ணீர் வடித்தனர்.

புறம்போக்கு மரத்தை எருவிட்டு நீரிட்டுக் காப்பவர்கள் இல்லை. எனினும், அது பழுத்தால் அந்தப் பயனை அடைய முனைபவர்கள் - முந்துபவர்கள் எவ்வளவு பேர்?

— சாமி பழ

அப்பர்தரும் விருந்து:

## மனிதப்பிறவியும் வேண்டுவதே!

எம்பெருமான் திருக்கோலம் கண்ணுக்கு விருந்து: கருத்துக்கும் விருந்து. அதனை அநுபவிக்கும் பேறு பெறுவதே வாழ்க்கையின் பயன். அப்பேறுபெற்றால், தொல்லைகள் சூழ்ந்ததாகக் கருதப்பெறுகிற மனிதப் பிறவியும் வேண்டத் தக்கதே-மதிக்கத் தக்கதே என்று பேசுகின்றார் அப்பரடிகள்.

பாடல் இதோ:

"குனித்த புருவமும்
கொவ்வைச் செவ்வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும்
பவளம்போல் மேனியில்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய
எடுத்தபொற் பாதமும்
காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும்
வேண்டுவ தேஇந்த
மாநி லத்தே"

— அப்பரடிகள்.

# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 4] 31-12-62 [இதழ் 6


## எல்லையில் போர்! இங்கு நம் வேலை?

நமது தாயகத்தின் எல்லையில் கம்யூனிஸ்டு சீனு ஆக்ரமிப்புப்போர் தொடுத்துள்ளது. இன்று கம்யூனிஸ்டு சீனு நமது எழுச்சியைக்கண்டும்—உலகமனித சமுதாயத்தின் தாக்குதலுக்கு ஆளாகியும் பின் வாங்குகிறது. ஆனல், நாளை நடக்கக்கூடியது என்ன? நாம் திட்டவட்டமாகக் கூற முடியாது. ஒருதடவை எதிர்பாராத தாக்குதலுக்கு ஆளாகிய நாம் மறுமுறையும் இப்படி நிகழாதவண்ணம் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். சுதந்திர பாரதத்தின் நாற்பத்தி ஆறு கோடி மக்களிடத்தில் இந்த அவசர நிலையில் ஒரு புதிய தேசிய சக்தி எழுந்துள்ளது. நாம் இந்த எழுச்சியை முறையாக நாட்டின் நலனுக்குப் பயன்படுத்தவேண்டும்.

நம்முடைய நாடு எல்லையிலும்சரி, மக்கள் தொகையிலும் சரி, கருத்து - கட்சி வேற்றுமையிலும் சரி மிகப்பெரிய நாடு. பொங்கி எழுந்த பாரதத்தின் தேசிய சக்தியின் முன்னே வேற்றுமைகள் மறந்து போயின. இப்பண்பை நாம் தொடர்ந்து காப்பாற்றிக் கொள்ளவேண்டும். நம்முடைய நாடு ஜனநாயக நாடு. அதாவது கருத்து வேற்றுமைகளையும் கூடப் பேச்சின் மூலம் எடுத்துக்காட்டி மனமாற்றம் காணவேண்டுமேயொழிய காழ்ப்பின் மூலமோ-வெறுப்பின் மூலமோ கூடாது என்பதனை மறந்துவிடக் கூடாது. திறந்த வெளியில் — தத்துவ-கொள்கை ரீதியான-நியாயமான-அன்பின் வழியான விளக்கங்கள் தந்து மனமாற்றம் செய்தலே ஜனநாயகப் பண்பு. அதை மறந்துவிட்டு அவர் அக்கட்சி-இவர் இக்கட்சி – பார்க்கமாட்டேன் - பார்த்தாலும் பேசமாட்டேன்; அழைக்க மாட்டேன்-அழைத்தாலும் போகமாட்டேன் என்றெல்லாம் கூறி வெறுப்பு - பகைமை உணர்ச்சிகளை வளர்த்துக் கொள்வது ஜன நாயக வாழ்க்கை முறையல்ல. மாறாக, பகைமையை வளர்த்து-சமூகத்தைப் பிரியச் செய்து-தகுதியற்ற தன்னுடையதலைமையை-செல்வாக்கைக் காப்பற்றிக் கொள்ளும் முயற்சியேயாகும் இம்மனப் போக்கை மாற்றிக்கொண்டு, தெளிவான சிந்தனை-கருத்தின் வழிப்பட்ட தேசிய இளைஞர் அணி ஒவ்வொரு ஊரிலும் அமையவேண்டும். இந்த அணி அந்த ஊர் மக்களிடத்தில் தேசிய வழிப்பட்ட கருத்துப் புரட்சிகளைத் தோற்றுவித்து வளர்க்கவேண்டும்.

கிராமங்களில் இன்னும் மனிதசக்தி வீணுகிக் கொண்டிருக்கிறது. உருப்படியாக-உப்புக்கும்-பருப்புக்கும் பயன்படாத அற்ப விஷயங்களைப் பற்றியே பேசித் தீர்க்கின்றனர். ஆளுவதற்கு ஒன்றும் இல்லை. எனினும், கிராமத்தில் சிலரிடத்தில் வரட்டுமிக்க ஆதிக்க மனப்பான்மை குடிகொண்டிருப்பதை தேசிய இளைஞர் அணி ஜனநாயக ரீதியில் திருத்தும் முயற்சிகளைச்செய்யவேண்டும்

பண்டு, எல்லாம் கிராமத்தில் விளையும். நகரங்கள் கிராமத்தை நம்பி வாழ்ந்தன. இன்று நேர்மாறானநிலை. கிராமத்தில் தேவைகள் கிராமத்தில் உற்பத்தி இல்லை. எனவே கிராமங்கள் நகர வாழ் மக்கட்குக் கடன்படும் நிலை. கிராமத்தில் அவைகளை எவ்வளவு உற்பத்திசெய்ய முடியுமோ, அவ்வளவையும் உற்பத்தி செய்யும் தீவிர முயற்சியில் இளைஞர் அணி கிராமச் சமுதாயத்தின் ஒத்துழைப்புடன் ஈடுபடவேண்டும். இன்று - இங்கு நம்முடைய வேலை இவைகளேயாம். இத்தகு வேலைகளைச் செய்து முடிக்கும் ஆர்வம்-திறமையுடைய தேசிய இளைஞர் அணி இந்த நாட்டின் போர்முனைக்கு வலிவூட்டும்—வாழ்வளிக்கும்.

—அடிகளார்.

# ஆக்ரமிப்புக் கண்டனக் கூட்டங்களில் அரசியல் வேண்டாம்!

## தி. மு. க. விற்கு அடிகளார் வேண்டுகோள்

### நாட்டின் நிலைமையுணர்ந்து நேருவின் தலைமையை ஏற்றுக்கொண்டார் அறிஞர் அண்ணா!

### ஏற்றுக்கொண்டதற்கு அடிகளார் பாராட்டு!

கரிசல்பட்டியில் தி. மு. க. சார்பில் சீனா ஆக்ரமிப்புக் கண்டனக் கூட்டம் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் 27...12...62 மாலை நடைபெற்றது. சட்டமன்ற உறுப்பினர் திரு. செ. மாதவன் வட்டச்செயலர் திரு. பெரி. அழகு ஆகியோர் பேசினர். திரு. மாதவன் பேசும் பொழுது குறிப்பிட்டதாவது:

"அடிகளார் அரசியல் நாகரிகத்தின் இருப்பிடம். அவர் தேசப் பற்றோடு மக்களுக்குத் தொண்டு செய்வதையே விரும்புகின்றார். உலகிலேயே மிகச் சிறந்த ஜனநாயகத் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள். அவர் தலைமையில் நாடு தன் எல்லையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்றார்.

அடுத்து தவத்திரு அடிகளார் அவர்கள் தமது தலைமையுரையில் பேசியதாவது:

"இன்று நாயகத்தின் எல்லையில் நீதிக்கும் நியாயத்திற்கும் புறம்பாகக் கம்யூனிஸ்டு சீனா ஆக்கிரமிப்பு நடத்தி இருக்கிறது. அந்நியனின் ஆக்ரமிப்பை எதிர்த்துப் பாரத நாட்டு மக்கள் அனைவரும் சாதி-இன-அரசியல் மதவேறுபாடுகளை மறந்து ஓரணியில் பாரதத் தாயின் மணிக்கொடியின் கீழ் அணிவகுத்து நிற்கிறார்கள். இந்த நேரத்தில் தி. மு. க. நண்பர்கள் அரசியல் - அதாவது ஆளும்கட்சியைப் பற்றிக் குறைகள் பேசக் கூடாது. ஆட்சியில் எந்தக் குறையும் ஏற்பட்டு விடவில்லை. ஏற்படப்போவதுமில்லை. உலகில் சுதந்திரம் பெற்ற பல நாடுகளின் வரலாற்றைப் படித்துப் பார்த்தால் தெரியும். அந்த நாடுகள் சுதந்திரம் பெற்றபிறகு, பல ஆண்டுகள் ஜனநாயகம் செயல்படவில்லை. மக்கள் முன்னேற முடியாதபடி பிற்போக்குச் சக்திகளே தலைதூக்கி ஆட்டம் போட்டுள்ளன. இங்கு நம்நாட்டிலோ, விடுதலை பெற்ற அந்த நாழிகை முதலே பரிபூரண ஜனநாயகம்-களங்கமற்ற ஜனநாயகம்...எதிர்க்கட்சிகள் கூட ஏற்றுப் போற்றும் அளவிற்கு உள்ள ஜனநாயகத் தலைமை. அது மட்டுமா? நமது நாட்டு மக்கள் ஆதிக்கசக்திகளினின்றும் நிலப்பிரபுத்துவ முறையினின்றும் நிரந்தரமான விடுதலை பெற்றுச் சுதந்திரத்தின் பலன்களை அனுபவிக்கின்றார்கள். அந்நியனை விரட்ட மட்டுமல்ல நேருவின் தலைமை! இன்றைக்கு மட்டுமல்ல, என்றைக்கும் அவரே இந்நாட்டின் தலைவர். அவர் தலைமையிலேயே இந்த நாட்டின் சாதாரண மக்களுடைய உரிமை காப்பாற்றப்படும். அறிஞர் அண்ணா அவர்களுக்குமற்ற சிலரைப்போலத் தலைமைக் காய்ச்சல் இல்லாதது போற்றுதற் குரியது. நாட்டின் நிலைமையை உணர்ந்து, அறிஞர் அண்ணா நேருவின் தலைமையை ஏற்றுக் கொண்டிருக்கிறார் அதற்கு நமது பாராட்டு.

## என்றைக்கும் நேருவே இந்நாட்டின் தலைவர்.

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 7. இசைஞானியார்

...அடிகளார்...

உலகியலில் அறிமுகப் படுத்தும் கலை நுணுக்கமானது; பல மரபுகளைத் தழுவிய கலையும் கூட. அறிமுகப் படுத்தும் பணியில் முன்னிற்கும் பெயர் நாடறிந்த பெயரேயாம்.



தந்தையின் சிறப்பினால் மக்கட்குச் சிறப்பு, மக்களின் சிறப்பினால் தந்தைக்குச் சிறப்பு; கணவனால் மனைவிக்குச் சிறப்பு, மனைவியால் கணவனுக்குச் சிறப்பு; ஊழியர்களால் நிறுவனத்திற்குச் சிறப்பு, நிறுவனத்தால் ஊழியர்களுக்குச் சிறப்பு; பணத்தால் மனிதனுக்குச் சிறப்பு, மனிதனால் பணத்துக்குச் சிறப்பு. இப்படிப் பலவகை. விரிப்பின் பெருகும்.

சேக்கிழார் அடிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஈன்றெடுத்த இசைஞானியாரைத் தனியடியாராக வைத்துப் பாடிப் பரவுகின்றார், இசைஞானியார் புகழ், பேச முடியாது என்று கூறுகின்றார்.

குடும்பவாழ்வு பலர் நடத்துகின்றார்கள். மக்கட்பேறு எல்லாரும் பெறுகின்றார்கள். அந்தக் குடும்பப் பணியை நடத்தும்பொழுது நற்சிந்தனையுடன் நன்மக்கட்பேறு கருதி நடத்துதலில்லையே. ஆயிரத்தில் ஒன்றுகூட அருமையானதாக அமைவதில்லையே! சடையனார் இசைஞானியார் குடும்ப வாழ்வு. தூய மனை வாழ்வு. அறத்தின் வழிப் பட்ட வாழ்வு. சிவநெறிச் சிந்தனையில் திளைத்த மனையறம். அதனாலன்றோ, ஆரூரை—ஆண்டவனையே தோழராகக்கொண்ட எம்பெருமான் சுந்தரரை ஈன்றெடுக்க முடிந்தது?

மீண்டும் நமது நாட்டின் குடும்பங்கள் சிந்தனையில் செழிக்கவேண்டும். அதற்குக் குடும்பம் தழுவிய சமயநெறி வேண்டும்.

இசைஞானியார் புகழ் பேச முடியாது என்று எம்பெருமான் சேக்கிழாரே கூறும் பொழுது நமது எழுத்தால் எப்படி முடியும்? ★

## சிந்தனைத் தொடர்...

—அடிகளார்—

### இலட்சியக்குடும்பம்...

இன்று மணமுடிக்கும் போது மணமகன் அல்லது மணமகளுடைய செல்வம்—உடற்கட்டு—படிப்பு இவற்றைத்தான் நோக்குகின்றனர். எதிர்காலத்தில் நல்வாழ்வுச் சமுதாயததை — இலட்சியச் சமுதாயத்தை அமைக்க இவையா தேவை? இந்த நாட்டுச் சமுதாயம் எதிர்காலத்தில் சிறப்புடன் விளங்க வேண்டுமானால் பணமிருக்கிறதா? உடற்கட்டு இருக்கிறதா? படிப்பிருக்கிறதா என்றுபார்க்காது அவர்களது வாழ்வில் நல்ல இலட்சியம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் நாவுக்கரசரை—வாதவூராரை ஈன்றெடுத்த இலட்சியக் குடும்பங்கள் பல நாட்டில் தோன்ற வழிபிறக்கும்.

### எதுவேண்டும்?

இன்றைய அறநிலையங்களில் (திருக்கோயில்களில்) அங்குள்ள நகை தங்கம் வெள்ளி வைரம் வைடூரியங்களுக்கு வகைவகையான பட்டியலைக் காண்கிறோம். ஆனால் அவ்வறநிலையங்களைச் சுற்றியுள்ள ஊரில் வாழும் பக்தி நலஞ்சான்ற அடியவர் பட்டியல் உண்டா? அங்கே வரவு செலவைத் தக்கவாறு சரிசெய்து வளமுட்டத்தணிக்கையாளரைக் காண்கிறோம்! ஆனால் அங்கு வாழும் அடியவர் வாழ்வைச் சீராக்கி வளமூட்டத் தணிக்கையாளர் வேண்டாமா? மேன்மைகொள் சைவநீதி தழைத்தோங்கத்தங்கம்வெள்ளிப்பட்டியலும் வரவு செலவுத்தணிக்கையுமா தேவை! அடியவர் பட்டியலும் அவர்வாழ்வை வளமூட்டும் தணிக்கையுமல்லவா தேவை!

# கருத்தை வெளியிட உரிமையுண்டு; எனினும் முரண்படுவோரிடம் காழ்ப்போ கசப்போ கொள்ளலாகாது

## பிரான்மலை குன்றக்குடி அடிகளார் உயர்நிலைப்பள்ளிக் கட்டிடத் திறப்புவிழாவில் தவத்திரு அடிகளார்

வாழ்க்கை ஒரு மலர்ப்பாதை யல்ல. துன்பச் சூழல்கள் நிறைந்த வாழ்க்கைப்பாதையைக் கடந்து செல்வதற்கு நாம் செய்கின்ற செயல்களால் ஏற்படும் அனுபவமும்—சாதனைகளும் நமக்கு ஒரு புதிய தெம்பைத் தருகின்றன.

வள்ளல்-பாரி வாழ்ந்த புலமைச் சூழலில் உயர்நிலைப்பள்ளி ஒன்று திறக்க இரண்டு ஆண்டுகட்கு முன் அரசியலாரிடமிருந்து அனுமதி கேட்டோம். அனுமதி வந்துவிட்டது. ஆனால், பள்ளியில் சேர்ந்துபயில மாணவர்கள் தாம் இல்லை, அதற்காக ஒரு மாணவர் விடுதியைத் தொடங்கி அதன்மூலம் இந்த உயர்நிலைப் பள்ளியைக் காப்பாற்றிக் கொண்டோம்.

அன்று, ஒரு மாணவனுக்கு 60 ரூபாய் செலவாயிற்று. இன்று மாணவர்கள் சேர்ந்து படிப்படியாக அந்தச் செலவு குறைந்து வந்திருக்கிறது. இன்று, இந்த உயர்நிலைப் பள்ளிக்கு ஒரு நல்ல கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது.

சமுதாயம் நன்றாக வளர வேண்டுமானால் கருத்துப் புரட்சி தேவை. இன்று நமக்குள்ளே ஆயிரமாயிரம் பேதங்களைக்கற்பித்து வளர்த்து வருகிறோம். அதனால்தான் இந்தத் தேசம் முன்னேற வில்லை. வாழ்கின்றவர் ஒன்பது பேர் என்றால் வளர்கின்ற கருத்து வேற்றுமை பத்தாக இருக்கிறது. ஒவ்வொருவருக்கும் அவரவர்களுடைய கருத்தை வெளியிட உரிமை வேண்டும். ஆனால் தன் கருத்தோடு முரண்படுகின்றவர்கள் மீது காழ்ப்போ, கசப்போ கொள்ளக் கூடாது. நம்மில் பலர் நொய்யரிசி போல சீக்கிரத்தில் உணர்ச்சிவசப்படுகின்றோம். ஆலோசனையும்—சிந்தனையும் இன்றி, சாட்சியங்களும் இல்லாமல்ஊகித்துக் கொண்டுபேசுவது, தெரியாத விஷயங்களைத் தெரிந்தது போல காட்டிக்கொண்டு கச்சேரி நடத்துவது, தனக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் எல்லாம் தலையிடுவது என்பன போன்ற குணக்கேடுகளை ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும். நாம், பள்ளி ஆசிரியர்களாக இருந்தாலும் சரி, பிறதுறைகளில் இருந்தாலும் சரி நிறையப் படிப்பதில்லை—சிந்திப்பதில்லை.

பள்ளிகள் நாட்டிற்கு இன்யமையாத் தேவையாக இருப்பன. சமுதாயத்தில் நல்ல கல்விச் சூழல் இருக்கவேண்டும்.

அன்று இந்த நாட்டை—நம்மை அந்நியர்கள், மிட்டா மிராசுகள் ஆண்ட போது நாம் பிரிந்து வைக்கப் பெற்றோம். இன்று நம்மை அந்நியர்கள் ஆளவில்லை. மிட்டா மிராசுகள் ஆளவில்லை. நமக்காக நம்மை நாமே ஆளுகின்றோம் என்பதை மறந்து விடக்கூடாது.

பொதுவாக, கதிர் பிடிப்பதற்கு முன்பே—பால் பிடிப்பதற்கு முன்பே பயிருக்கு உரம் போடவேண்டும். அப்படிச் செய்தால்தான் அந்தப் பயிர் வளமாக வளர்ந்து பயன் தரும். கதிர் பிடித்த பிறகு உரம் போடுவதினால் பயனில்லை அதுபோலவே நமது குழந்தைகளுக்கு இளம் வயதிலேயே நல்லபழக்க வழக்கங்களை, பண்பாடுகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

இந்த நாட்டின் வருங்காலச் செல்வங்கள் குழந்தைகள். அந்தக் குழந்தைகளை நல்ல முறையிலே வளர்ப்பதில் பெரியவர்கள் ஆர்வமும் அக்கறையும் காட்டவேண்டும்.

அன்று-பாரி வாழ்ந்த அந்த நாளில் இந்தப் பறம்புமலை புலவர்கள் வந்துகூடும் ஒரு பல்கலைக் கழகமாகத் திகழ்ந்திருக்கிறது. இன்று மீண்டும் இந்தப் பகுதியை அத்தகைய நல்ல கருத்துச் சூழலை உருவாக்கும் ஒருநல்ல பகுதியாக்க இங்கு பணியாற்றுகின்ற ஆசிரியநண்பர்கள் முயற்சிக்க வேண்டும்.

# கிராமங்களில் வேலைசெய்வதே நல்ல தேசப்பணியாகும்

# தனிவாழ்க்கையில் இருக்கும் வேறுபாடுகளை மறந்து பொதுவேலைகளில் ஒத்துழைக்க வேண்டும்

நகரங்களில் வேலை செய்ய நிறைய ஆட்கள் வருவார்கள். கிராமங்களை அதிகமாக விரும்புவதில்லை. கிராமங்களில் வேலை செய்வதே நல்ல தேசப் பணி என்பதைப் படித்த இளைஞர்கள் உணரவேண்டும். கிராமங்களில் உள்ள பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் படிப்பில் அதிகமாக அக்கறைகாட்டுகிறார்களில்லை. அவர்கள் அடிக்கடி ஆசிரியர்களைக்கண்டு தங்கள் குழந்தைகளின் கல்வி பற்றிக் கேட்க வேண்டும். பள்ளிக்கும் வீட்டுக்கும் நல்ல உறவு இருக்க வேண்டும். ஆனால், தேர்வு சிபாரிசுகளுக்காக ஆசிரியர்களை நெருங்கக்கூடாது.

இந்தக் கிராமத்தில் படித்த இளைஞர்கள் —பட்டதாரிகள் நிறைய வரவேண்டும் கட்சி, சாதி விவகாரங்களை எல்லாம் மறந்து விடவேண்டும். என்னைப் பொறுத்தவரை கட்சி, கருத்து ஆகியவை இரண்டாம் இடத்திலேயே வைக்கும் கருத்துண்டு. சமுதாயத்திற்குச் சேவை செய்யும் இலட்சியத்திற்கே முதலிடம். தனி வாழ்க்கையில்இருக்கும் வேறுபாடுகளையெல்லாம் மறந்து விட்டுப் பொதுவேலைகளில் ஒத்துழைக்க வேண்டும்.

நான் இந்தநாடு அடிமைப் பட்டுக்கிடந்த காலத்தில்— விடுதலைக்காக மக்கள் போராடிக் கொண்டிருந்த நேரத்தில் ஒரு சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவன். எனக்கு இலட்சியமெல்லாம் இந்த நாடு நல்ல நிலை எய்த வேண்டும்என்பது.தான் அதற்காக நான் எந்தக் காரியத்தையும் செய்வேன்; எவரோடும் சேருவேன் - எந்த வேஷமும் போடுவேன். நமக்கு இலட்சியம் நம்முடைய மக்களை ஈடேற்றுவது. இதற்காக நான் ஒவ்வொருநாளும் அது பற்றிச் சிந்திக்கிறேன். நான் யார் என்பது இந்த நாடு முழுவதுக்கும் தெரியும். நான் யார் யாரோடு பழகுகிறேன் என்பதும் தெரியும். மாற்றுக் கருத்துடையவர்கள், முரண்பட்டகொள்கையுடையவர்கள் எல்லோருடனும்பழகுகிறேன். கருத்து வேற்றுமைகளுக்காக தனி மனித வாழ்க்கையில் காட்டவேண்டிய பரிவு— பாசம் ஆகியனவற்றைத் துறந்துவிட வேண்டும் என்று எதிர்பார்ப்பது நாகரிகமல்ல- பண்பாடுமல்ல. அப்படிவிட்டு விடுவதால் பாரினில் பகையே வளரும், பண்புகள் வளராது. நான் உங்களுக்கு உபயோகப்படுகிறேனா இல்லையா? நீங்கள் என்னை உபயோகப்படுத்திக் கொள்ளும் அளவிற்கு நான் எளிமையாக இருக்கிறேனா இல்லையா என்பதைத் தான் பார்க்கவேண்டும்'

நமது குழந்தைகளிடத்தில் ''நாம் ஒரே குடும்பம்'' என்ற உணர்வை;வளர்க்கவேண்டும் இந்த நாடு வளம்பெறவேண்டும்; வாழ்வு பெறவேண்டும்; செல்வத்தில் செழிக்கவேண்டும்; என்ற ஆசையை வளர்த்துக் கொள்ள வேண்டும் வேற்றுமைகளையும், வெறுப்புணர்ச்சிகளையும் விட்டொழித்து விட்டு யாருடனும் பகைவருடனும் கூட அன்பாகப் பழகப் பயில வேண்டும். இன்று நாட்டுக்கு நல்லது - உகந்தது எனக்கருதும் நமது தலைவர் நேருஜியின் நடுநிலைக் கொள்கையைத் தனிமனித வாழ்க்கையிலும்...கிராமப்பொதுவாழ்க்கையிலும் கடைப்பிடிப்பது நல்லது.

நம்முடைய நாடு பல துறைகளில் முன்னேற வேண்டும். அரசினரின் ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றும் பணியில் நாம் ஈடுபட்டு வெற்றி காணவேண்டும். நாட்டின் நிருமாணவேலைகளில்பொதுச் சேவைகளில் எல்லாரும் ஈடுபடவேண்டும். இறைவனால் நமக்குச் சக்திகொடுக்கப்பட்டிருக்கிறது. அதை நல்ல முறையிலே பயன்படுத்தி நாம் முன்னேற வேண்டும்; கால்பந்து விளையாட்டு உங்களுக்குத் தெரியும். யாரையும் தரையில் வீழச் செய்து வெற்றிபெற்றால் அது வெற்றியாகக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. எதிரியையும் ஆரோக்கியமாக நம்முடன் விளையாடச்செய்து நம்முடைய திறமையால் பந்தை விளையாடித்தான் வெற்றி பெறவேண்டும். விளையாட்டுப் போட்டியைப் போலவே நமது வாழ்க்கைப் போட்டிகளையும் திறந்த வெளியில் நடத்தி வெற்றி பெறவேண்டும். அண்ணல் காந்தியடிகள், திறந்த மேனியொடு வாழ்ந்தார்—திறந்த உள்ளத்தினராகவும் வாழ்ந்தார்; அத்தகைய திறந்த உள்ளம் எல்லோருக்கும் வேண்டும். அத்தகு பண்பு தனிமனிதனுக்கும் நல்லது; கிராமத்திற்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது..

**திறந்த வெளியிலே திறந்த மனதோடு வாழ்க்கைப் போட்டி நடைபெறவேண்டும்.**

# அடிகளார் தலைமையில் சீன ஆக்ரமிப்புக் கண்டனக் கூட்டங்கள்

இராமநாதபுர மாவட்டப் பட்டமங்கலம் தி. மு. க. சார்பில் 24-12-62ல் சீன ஆக்கிரமிப்புக் கண்டனப் பொதுக் கூட்டம் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சட்டமன்றஉறுப்பினர் திரு செ. மாதவன் பேசினர். திரு முத்தழகு நன்றி கூறினர்.

நெற்குப்பை தி.மு.க. சார்பில் 26-12-62ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடந்தது. திரு செ. மாதவன் பேசினர். திரு பொய்யாமொழி நன்றி கூறினர்.

கீழச்சிவல்பட்டி தி. மு. க. சார்பில் 26-12-62ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடந்தது. திரு செ. மாதவன் பேசினர். திரு மருதப்பன் நன்றி தெரிவித்தார்.

கரிசல்பட்டி தி. மு. க. சார்பில் 27-12-62ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு செ. மாதவன், திரு பெரி. அழகு இருவரும் பேசினர். திரு சதாசிவம் நன்றி நவின்றார்.

கட்டுக்குடிப்பட்டி தி. மு. க. சார்பில் 28-12-62ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. செ. மாதவன் பேசினர். அடிகளாருக்கும், திரு. செ. மாதவனுக்கும் போடப்பெற்ற கைத்தறித் துண்டுகளைத் திரு. மு.வீர. அழகப்ப பிள்ளை ரூ. 57க்கு ஏலத்தில் எடுத்தார். திரு. முகைதீன் உசேன் நன்றி கூறினர்.

## ஒரு சேவல் 500 ரூ.

முசிறி தாலுகா தொட்டியத்தில் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் சீன ஆக்ரமிப்புக் கண்டனப் பொதுக்கூட்டம் நடந்தது. தமிழ்நாடு அமைச்சர் மேதகு வி. இராமையா அவர்களும்—தவத்திரு அடிகளார் அவர்களும் கலந்துகொண்டார்கள். தேசியப்பாதுகாப்பு நிதிக்கு ஒருவர் சேவல் கொடுத்தார். தவத்திரு அடிகளார் அவர்கள் சேவலை ஏலம் போட்டார்கள். விசுவநாதன் என்பவர் 401 ரூபாய்க்கு அதை எடுத்தார். தவத்திரு அடிகளார் அவர்கள் அந்தத் தொகையோடு ரூ. 99 சேர்த்து ரூ. 500ஐயும் தேசியப் பாதுகாப்பு நிதிக்காக அமைச்சரிடம் கொடுத்தார்கள்.

## பாதுகாப்பு நிதிக் கூட்டங்களில் பேசப் பணம் வேண்டாம்!

### அடிகளார் அறிவிப்பு

நாட்டின் நெருக்கடியான நிலைமையை முன்னிட்டுத் தவத்திரு அடிகளார் அவர்கள் "தேசியப் பாதுகாப்பு நிதி திரட்டுவதற்காகவும் - நேருஜியின் கொள்கைகளை ஆதரித்தும் நடத்தப்பெறுகிற பொதுக் கூட்டங்களிலும், சீன ஆக்ரமிப்புக் கண்டனப் பொதுக் கூட்டங்களிலும் எத்தகைய கட்டணமும் வாங்கிக் கொள்ளாமல் வந்து கலந்துகொள்வதாக அறிவித்துள்ளார்கள். யுத்தநெருக்கடி இருக்கும்வரை மேற்படி கூட்டங்களுக்குத் தாம் இலவசமாகவேவந்து பேசத் தயார் என்றும் அதற்குரிய தொகையைத் தேசப் பாதுகாப்பு நிதிக்கு அளிக்கும்படியும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## சைவத்திருமடங்களின் ஆதீனகர்த்தர்கள் சமூகத்திற்குப்

# பாதகாணிக்கை 9

நாம் வாழும் காலம் மக்களாட்சி சிறந்து விளங்கும் காலம். அன்று அரசன் எவ்வழியோ அவ்வழி மக்கள். இன்றே மக்கள் எவ்வழியோ அவ்வழி அரசு. இன்றைய மக்களிடமிருந்து ஒதுங்கி வாழ்வது சைவத்திற்கு ஆக்கம் தராது என்பதைத் திருவுளம் பற்ற வேண்டாமா?

# எங்களைப்போன்ற அதிகாரிகளுக்கு அடிகளாரைப் போன்ற பெரியார்களின் ஒத்துழைப்பு இருந்தால் இராமராஜ்யத்தை விரைவிலே காணலாம்

## பிரான்மலை; குன்றக்குடி அடிகளார் உயர்நிலைப்பள்ளிக் கட்டிடத் திறப்புவிழாவில் திரு. டி. பி. கருணாகரன்நாயர்

பிரான்மலை குன்றக்குடி அடிகளார் உயர்நிலைப் பள்ளிக்கு ரூ 12 ஆயிரம் செலவில் கட்டப்பெற்ற கட்டிடத்தை 24...12...62ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் திரு. டி. பி. கருணாகரன் நாயர் B. A. திறந்துவைத்துத் திருவிளக்கேற்றிவைத்தார்.

திரு. ந. சண்முகம் தேசியக் கொடியையும் திரு. வி. எஸ். சுப்பிரமணிய தேசிகர் அருள்நெறிக் கொடியையும் ஏற்றி வைத்தனர். தலைமை ஆசிரியர் திரு. வ. இராசகோபாலன் அனைவரையும் வரவேற்றார். பள்ளிப் பொறுப்பாளர் திரு. ஆறு. சுப்பிரமணிய பிள்ளை அறிக்கை படித்தார்.

தவத்திரு அடிகளார் அவர்கள், பள்ளிப் பொறுப்பாளர் பள்ளியின் வளர்ச்சியில் காட்டிவரும் அக்கறையையும் ஆர்வத்தையும் பாராட்டினார்கள். (தலைமையுரை ஆரும்பக்கத்தில் இடம் பெற்றுள்ளது.)

காந்தியடிகள் படத்தைத்திரு பழ. முத்துராமலிங்கம் திறந்து வைத்து; 'காந்திஜி எதை நினைத்தாரோ சொன்னாரோ அதையே செய்து காட்டினார், என்றார். சிங்கம்புணரி ஊராட்சி மன்ற ஒன்றியப்பின் ஆணையர் திரு. பி. பழனிச்சாமி பி. ஏ. நேருஜி படத்தைத் திறந்து வைத்தார். அவர் அடிகளார் அவர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், சுவாமிஜி இந்தப் பகுதிக்கு ஒரு வரப்பிரசாதமாக இந்தப் பள்ளியைக் கொண்டு வந்துள்ளார்கள்; "நமது தெய்வங்கள் மேலிருந்தே நமது நலன்களைக் கவனிப்பது போல சுவாமிஜி குன்றக்குடியில் இருந்து கொண்டு இந்தப்பகுதி மக்களின் நலன்களைக் கவனித்து வருகிறார்கள்" என்றார். பாரதியார்படத்தைப்பாரதிபண்ணை உரிமையாளர் திரு. கே. எம். சுப்பையா திறந்து வைத்துப் பாரதியின் சமுதாய உணர்வை விளக்கி 'இன்று நாம் நமது சுவாமி (தவத்திரு அடிகளார்) அவர்களின் சமுதாய உணர்வின் வழிநின்று மக்கள் சேவை செய்வோம்' என்றார்.

திரு. டி. பி. கருணாகரன் நாயர் பி.ஏ, அவர்கள் (R.D.O. தேவகோட்டை) பேசுகையில், 'எங்களைப் போன்ற அதிகாரிகளுக்கு அடிகளார் அவர்களைப் போன்ற பெரியார்களின் ஒத்துழைப்பு இருந்தால் மிக விரைவிலேயே காந்திஜி காண விரும்பிய இராம ராஜ்யத்தைக் கண்டு விடலாம்" என்றார். 'அடிகளார் அவர்களின் அருளாலும் ஆசியாலும் படித்துப் பட்டம் பெற்று இப்பள்ளியின் தலைமை ஆசிரியராக இருக்கும் திரு இராசகோபாலனைப் போல இங்கு பயிலும் எல்லோருமே தலைமை ஆசிரியர்களாகவும், பேராசிரியர்களாகவும் வரவேண்டும் என ஆசைப்படுகிறேன்" என்றும் கூறினார்.

திரு கு. உ. தங்கவேலன் தனது சிறப்புரையில், 'எவ்வளவுதான் நமக்குச் சோதனைகள் ஏற்பட்ட போதிலும் நம்முடைய அபிவிருத்தி வேலைகள் பாதிக்கப்படவில்லை என்பதன் அறிகுறியே இந்தவிழா, என்றார்.

பள்ளி மாணவ மாணவியரின் கலா நிகழ்ச்சிகளும் குன்றக்குடி அருள் நெறிக் குழுவினரின் 'சந்திப்பு' என்ற நாடகமும் நடைபெற்றன. திரு வ. இராசகோபாலன், திரு ஆறு. இராமச் சந்திரன் இருவரும் நன்றி கூறினர். நாட்டு வாழ்த்துடன் விழா நிறைவெய்தியது.

## அடிகளார் வழிநின்று மக்கள் சேவைசெய்வோம்

# அன்பர்களின் கேள்விகட்கு அடிகளாரின் பதில்கள்

**கேள்வி:**

தன்னம்பிக்கை பெரிதா? கடவுள் நம்பிக்கை பெரிதா?

**பதில்:**

நாணயத்தின் இரு பக்கங்கள் போல வாழ்க்கைக்குத் தன்னம்பிக்கையும் கடவுள் நம்பிக்கையும்.

**கேள்வி:**

விவிலியத்திற்கு பைபிள் வேதமாக இருப்பது போல சைவசமயத்திற்கு ஒப்பற்ற ஒரே மறையாகத் திருவாசகத்தைக் கொள்ளக் கூடாதா?

**பதில்:**

நன்ருகக் கொள்ளலாம்.

**கேள்வி:**

தொண்டின் நெறியிற் சிறந்தவர் அப்பர் என்கிருர் அன்பர். மாணிக்கவாசகர் என்கிறேன் நான். எது சரி?

**பதில்:**

அப்பரடிகளே தொண்டில் சிறந்தவர்.

**கேள்வி:**

திருநீறு பூசுவதன் கருத்தென்ன?

**பதில்:**

வாழ்க்கையின் நிலையாமை, தூய்மை, இறையுணர்வு ஆகியவைகளை வளர்த்துக் கொள்ளத் திருநீறு அணிகிருேம்.

**கேள்வி:**

நாம் இறைவனுல் படைக்கப்பட்டிருந்தால் நம்மை ஏன் துன்பங்கள் வாட்டுகின்றன?

**பதில்:**

நாம் (உயிர்கள்) இறைவனுல் படைக்கப் பெறவில்லை. உயிர்களுக்குத் தோற்றமும் அழிவும் கிடையாது.

**கேள்வி:**

யுத்தகால மந்திரிசபை அமைக்க வேண்டும் என்கிருர்களே, அதுபற்றித் தங்கள் கருத்தென்ன?

**பதில்:**

நியாமற்ற கோரிக்கை. பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்ற காங்கிரஸ் இந்த நாட்டை ஆளுகிறது. முறையான எதிர்க்கட்சி ஒன்று பாராளுமன்றத்தில் இல்லை. 50 அங்கத்தினர்களாவது இருந்தால்தான் எதிர்க்கட்சியாக முடியும். ஜனநாயகத்தின் வழி பதவி பெற முடியாத 'பழைய' ஆட்களின் பல்லவி இது.

**கேள்வி:**

நடுநிலைக் கொள்கையில் அறிஞர் அண்ணுவுக்குச் சலனமிருப்பதாகத் தெரிகிறதே.

**பதில்:**

ஆம். ஆனுலும் ஏற்றுக் கொண்டுள்ளார். ராஜாஜியைத் திருப்திப் படுத்தவும் சலனம் இருப்பதாகக் காட்டிக் கொள்ளலாம் அல்லவா?

**கேள்வி:**

பெரியார் ஈ. வெ. ரா. ராஜாஜி எதைச் சொன்னுலும் மறுக்கிருரே.

**பதில்;**

அதில் என்ன ஆச்சரியம்? அதுவே அவர் வாழ்க்கையின் குறிக்கோள்.

**கேள்வி**

இந்த அவசரகால நிலைமையில் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு, நேரு சர்வாதிகாரியாக ஆகக்கூடாதா?

**பதில்:**

ஆகலாம். அப்படி ஆனுலும் மக்கள் கவலைப்பட மாட்டார்கள். அதனுலும் இந்த நாடு அடையக்கூடியது நன்மையாகத்தான் இருக்கும். ராஜாஜியே கூட நேரு சர்வாதிகாரியாவதை வரவேற்கிருர். ஆனுல் நேருஜி செய்ய மாட்டார். ஏன்? அவர் ஒரு இயற்கையான ஜனநாயகத் தலைவர். மக்களின் இதயப்பூர்வமான தலைவர்.

# அடிகளார் பேசுகிறார்!

## சுயநலமிருந்தால் பரவாயில்லை!

சுயநலத்தைவிட்டுவிடவேண்டும் என்று சொல்லுகிறார்கள். நான் சுயநலம் இருந்தால் பரவாயில்லை என்கிறேன். சுயநலத்திற்காகப் பொது நலத்திற்குக் கெடுதல் பண்ணக்கூடாது என்பதுதான் என்னுடைய கருத்து. நம்முடைய மரத்திற்கு உரமிட்டுப் பாதுகாப்பது தவறில்லை. ஆனால், புறம்போக்கு மரத்தை வெட்டியெறியக்கூடாது. சுயநலத்திற்காகப் பொது நலத்தைப் பலி கொடுக்காத பண்பு வளர்ந்த பிறகு வேண்டுமானால் சுயநலத்தை விட்டு விடுங்கள் என்று சொல்லலாம்

## சருகும் சாதியும்

பழுத்த இலைகள் சருகாகி உணர்வது போல சாதிய உணர்வுகள் அழிந்துகொண்டு வருகின்றன.

## தேவையை எழுதுங்கள்

எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் இந்த நாட்டு மக்களின் விருப்பத்தையே எழுதுவதும் பேசுவதும் நல்லதல்ல...இந்நாட்டு மக்களின் நல்வாழ்விற்குத் தேவையானவற்றை எழுதுவதும் பேசுவதுமே சிறந்தது.

## மனிதப்பிறவி

வாழ்க்கை பொய் - மாயை என்ற கருத்து சமண-பௌத்த மாயா வாதங்கள் வந்த பிறகு வந்த குப்பைகளே. பின்னர் சைவ சமயக் கூண்டிற்குள் அந்தக் குப்பைகள் பரிணாமப் பிரவேசம் செய்தன; அவைகளை அழித்துத் தகர்த்தெறிய வேண்டுமென்று அப்பரடிகளும், ஔவை போன்றவர்களும் விரும்பினர்.

'வாய்த்தது நந்தமக்கு
ஈதோர் பிறவி
மதித்திடுமின்'

என்றுபேசுகிறார் அப்பரடிகள்.

'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று அவர் பாடுகிறார்.

## பானையும் வீடும்

பானை தண்ணீர் வைப்பதற்காக; வீடு குடியிருப்பதற்காக. பானையிலுள்ள தண்ணீரைப் பற்றிக் கவலைப்படாமல் பானையைப் பற்றிக் கவலைப் படுவதும், வீட்டிலுள்ள மனிதனைப் பற்றிக் கவலைப் படாமல் வீட்டைப் பற்றிக் கவலைப்படுவதும் புத்திசாலித் தனமாகுமா? அதுபோல, வாழ்கின்ற மனித உயிர்களைப் பற்றிக் கவலைப்படாமல் மனித உயிர்களை வாழ் வாங்கு வாழவைக்கப் பிறந்த சமயச் சடங்குகளை மட்டுமே பற்றிக் கொண்டிருத்தல் பிழையேயாம்.

## நாயன்மார் திருநாட்கள்

| | | |
|---|---|---|
| திருநீலகண்டர் | தை | 6 |
| அப்பூதியடிகள் | ,, | 14 |
| கலிக்கம்பர் | ,, | 17 |
| கண்ணப்பர் | ,, | 22 |
| அரிவாட்டியர் | ,, | 23 |
| சண்டேசுரர் | ,, | 29 |

## அடிகளாரின் உவமைகள்

### தட்டும் பாலும்

ஒரு உழக்குப் பாலை நீள அகலமான தட்டில் கொட்டினால் பரவலாகப் பரந்து கிடப்பதால் பாலின் அளவு குறைவாகக் காட்சி அளிக்கும் ஆனால் அந்தப் பாலை உழக்கிலே ஊற்றி வைத்தால் நிறைய இருப்பதுபோலத் தோன்றும். சுதந்திரத்திற்குப் பிறகு இந்நாடு பொருளாதாரத்துறையிலும் வாழ்க்கைத் துறையிலும் வேகமாக முன்னேறியுள்ளது. ஆனால் குறைவான முன்னேற்றம் போலச் சிலருக்குக் காட்சியளிக்கிறது. ஏன்? நாற்பத்தாறு கோடி மக்கள் வாழ்கின்ற மிகப்பெரிய நாடாதலால்தான்.

### கைவிரல்

அந்நியனைக் கையால் அடித்து நொறுக்கி விரட்ட வேண்டுமானால் வேறுபட்ட தோற்றமுடைய கைவிரல்கள் ஒன்றாக இணைந்து சேர்ந்து அடிக்கப் பயன்படவேண்டும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் அதுபோலவே இன்றைய அவசர நிலைமையில் வேறுபட்ட கருத்துக்களும் கட்சிகளும் உடையவர்கள் கூட அவற்றையெல்லாம் மறந்துவிட்டுக் கூடி இணைந்து அந்நியனை விரட்ட வேண்டும்.

Registered No. M. 7058 THAMILAGAM - Weekly 31-12-62






# பொங்கற் பரிசு

தமிழ்ப் பெருமக்களின் தனிப்பெருந் திருநாள், பொங்கற் பெருநாள். அப்பொங்கல் நன்னாள் பரிசு ஆக தமிழக அன்பர்கட்கு இந்த மகிழ்ச்சிகரமான செய்தியை அறிவிக்கிறோம்.

நமது **'தமிழகம்'** கிழமை இதழின் ஆண்டுச்சந்தா ரூ. 5. ஆனால், இந்தத் தைப்பொங்கல் நாளுக்குள் **14—1—63**க்குள் தமிழகத்திற்குச் சந்தாதாரராகச் சேருகின்றவர்கள் ரூபாய் மூன்று (3-00) மட்டும் அனுப்பினால் போதும். ஓராண்டுக்குத் ''தமிழகம்'' தொடர்ந்து கிடைக்கும். எங்கே பார்க்கலாம். எத்தனைபேர் இந்தப் பொங்கல் பரிசைப் பெறப் போகிறீர்கள்?

மேலாளர், ''தமிழகம்''
குன்றக்குடி
(இராமநாதபுர மாவட்டம்)

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி, இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.